பிடிச்சுக்கணும். நன்ருக் குறிவைக்கணும். இதென்ன மாலதி? ஏன் ஓங்களிக்கறே?''

ஓங்களித்துக்கொண்டே இருந்ததால் மாலதியால் பதில் பேச முடியா வில்லை.

''உனக்கு என்ன வந்தது, மாலதி? எனக்கு ஒண்ணும் புரியல் லியே? விளக்கமாச் சொல்லேன்.''

மாலதி ரஞ்சித்திடம் இவ்வளவு நாட்களாகச் சொல்ல விரும்பி யதை, அருவருப்பிலும் தயக்கத்தாலும் இதுவரை சொல்லாமல் இருந் ததை, இப்போது சொல்லிவிட்டாள்.

''டாகுர், நான் அம்மாவாகப் போறேன். மூணு பிசாசுகள் என்னை அம்மாவாககிட்டாங்க!'' மேலும் பேச முடியாமல் அவள் ஓங்களித் தாள்.

இருட்டில் ரஞ்சித்துக்கு ஒன்றும் தெரியவில்லை. அவள் அவன் காலடியில் உட்கார்ந்திருந்தாள். மறுகரையில் தொடர்ந்தாற்போல் எண்ணற்ற டார்ச்சு விளக்குகளின் வெளிச்சம் தெரிந்தது. ஆனல் காட்டுக்குள் அதிகம் நுழையவில்லை. சிறு ஒளிக்கீற்றுகள் மட்டும் மழைத் தூறல் போல் இலைகளின் இடைவெளிகள் வழியே வந்தன. ரஞ்சித மண்டியிட்டு உட்கார்ந்தான். மாலதியின் தலைமேல வைததான். ''நாம ரொம்பத் தூரம் போகணும், மாலதி எங்கே போவோம்னு தெரியல்லே எனக்கு. நீ எழுந்திரு!''

முன் ஒரு தடவை சோனுவின் பைத்தியக்காரப் பெரியப்பா யானைமேல் உட்கார்ந்துகொண்டு கடந்த ஆற்றங்கரைக் காட்டில் ரஞ்சிததும் மாலதியும் ஒரு மரத்தடியில் அருகருகே படுத்துக் கொண்டு காலைக்காகக் காத்திருந்தார்கள். ரஞ்சித் ஒரு வார்த்தை யும் பேசவில்லை. பயந்திருந்த மாலதி புல்லுக்குள் முகத்தைப் புதைததுக்கொண டிருந்தாள். இருவருமே இரவு முழுதும் விழித் திருந்தார்கள். இவ்வளவு நிகழ்ந்த பிறகு என்ன பேச்சு பேசினல் சகஜ நிலைக்குத திரும்பிவர முடியும் என்று ரஞ்சித்துக்குப் புரிய வ்லலை. அவன் இந்தப் பெண்ணை அழைத்துக்கொண்டு எங்கே போவான்? அவளை எங்கே, யாரிடம் விடுவான்? மரக்கிளைகள் காற்றில் அசைந்தன. மரங்களின் இலைகளில் நிலவு — முடியப் போகும் இரவின் நிலவு விழுந்தது. 'பாதாய் பாதாய் பொடே நிசிர் சிசிர்!' யாரோ உரத்த குரலில படிக்கிருற் போன்ற பிரமை ''அட்லாஸ்ட் தி செல்ஃபிஷ் ஜயண்ட் கேம்.''

அதிகாலையில் கிழக்கு வெளுக்கு முன்பே மாலதிதான் ரஞ்சித்தை எழுப்பினள். விடியற்காலையில் அவன் தூங்கிப் போயிருந்தான்.

ரஞ்சித் பரபரத்துக்கொண்டு எழுந்தான். ஒரு லுங்கியணிந்து கொண்டான். தன் சூட்கேஸிலிருந்து கோந்தும் கொஞ்சம் சணலும் எடுத்துத் தன் முகத்தில் ஒட்டிக்கொண்டு முற்றிலும் ஒரு புதிய மனிதனாக மாறிவிட்டான். இப்போது அவன் ஒரு மியான் சாயபு. அவனுக்கு அருகிலுள்ளவள் புர்க்கா அணிந்த அவனுடைய பீபி. கட்கத்தில் ஒரு கிழிந்த குடை. மியானும் பீபியும் உறவினர் வீடு போகும் பாவனையில் நடந்தனர். சற்றே நொண்டி நொண்டிக் கொண்டு நடந்தான் ரஞ்சித்.

போகும் வழியில் மாலதி சொன்னாள்: "டாகுர், என்னை ஜோட்டன் கிட்டே விட்டுட்டுப் போ!"

ரஞ்சித் ஒன்றும் சொல்லவில்லை. இந்த நிலையில் அவளை வேறு எங்கே கூட்டிக்கொண்டு போவது? அவர்கள் தர்காவை நோக்கி நடந்தார்கள். நாள் முழுதும் நடந்தால் தர்காவை அடையலாம். மாலதியை ஜோட்டனிடம் விட்டுவிட்டு அவன் வேறெங்காவது போகத் தீர்மானித்தான்.

நடந்துகொண்டே அவன் யார் மேலோ கோபங் கொண்டவனாக அந்தக் காட்டுக்குள்ளே உரக்கக் கூவினான்: "வந்தே மாதரம்." அவனுடைய கோபம் ஜப்பர் மேலா அல்லது சந்தோஷ் தாரோகா மேலா என்று ரஞ்சித்தின் முகத் தோற்றத்திலிருந்து கண்டுபிடிக்க முடியவில்லை.

முதற்பாகம் நிறைந்தது.